*Nam nāṭu*

*Malar 1, itaḻ 166*

*December 24, 1953*

Record no. 1131

REGD. No. M. 6311

தனி இதழ் ஒரு அணு
இலங்கையில் 10 சதம்
மலர் 1] [இதழ் 166

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர்: அண்ணாதுரை

"THE NAM NADU" A TAMIL DAILY : THE OFFICIAL ORGAN OF: THE D.P.F

PHONE No. [illegible]

சந்தா விபரம்
உள்நாடு (இலங்கை உட்பட)
ஆண்டு ரூ 24—0—0
6 மாதம் ரூ 12—0—0
3 மாதம் ரூ 6—0—0
வெளிநாடு:
ஆண்டு ரூ 30—0—0
6 மாதம் ரூ 15—0—0
3 மாதம் ரூ 7—8—0

சென்னை: மார்கழி 9உ வியாழன் (24—12—53) ★ ★ ★ வெளியூர்: மார்கழி 10உ வெள்ளி (25—12—53)

# "இலட்சங்கள் செலவானாலும் இலட்சியம் கைகூடாது"

—(0)—

## 'எண்ணெய் செலவே ஒழிய பிள்ளை பிழைக்காது!'

## 'கதருக்குச் செலவிடும் தொகை விழலுக்கிறைத்த நீரே!"

### கதரைக் காக்க, கடன், கொடை, பயிற்சி, பிரசாரம், பரிசு!

"கடன், கொடை, பயிற்சி, பிரசாரம்—இந்த நான்கு தந்திரங்களோடு, ஐந்தாவது தந்திரமாகப் பரிசுகள் வழங்கிக் கதரைப் பரப்பவும் அரசாங்கத்தார் ஆலோசனை செய்து வருகிறார்கள். போட்டிகள் நடத்தி, நூல் நூற்பதில் வெற்றி பெறுபவர்களுக்கும், கதர் நெய்வதில் திறமை காட்டுபவர்களுக்கும், ரூ. 60,000 வரைக்கும் பரிசுகள் கொடுக்கப்போகிறார்களாம் இதுமட்டுமல்ல; இன்னும் அநேக தொகைகளைக் கொடுப்பதற்குத் திட்டம் போட்டிருக்கிறார்களென்றும் புது டில்லிச் செய்தி கூறுகிறது."

"பொருளாதாரத் துறையில் பயனற்ற முயற்சிதான் கதர் விருத்தி செய்யும் திட்டம் என்றும், அதற்காகச் செலவிடப்படும் தொகைகள் எல்லாம் விழலுக்கிறைத்த நீரென்றும் நாம் முன்னரே குறிப்பிட்டுள்ளோம். இப்போது கையாளப்படும் பஞ்ச தந்திர முறைகள் பலிக்கமாட்டா என்று வற்புறுத்திக் கூற விரும்புகிறோம். இலட்சங்கள் செலவானாலும், இலட்சியங்கள் சிக்கமாட்டா!"

"கடனும், நன்கொடையும் ஒரு அளவு தூரந்தானே செல்லும்? அதற்குமேல் என்ன செய்வது? ஆகையால், இவையிரண்டும் இல்லாத ஒரு நிலையில் கதர் நிலையத்தாருக்கு அரசாங்கத்தார் உதவி செய்ய முன்வந்துள்ளார்கள். 'நூல் நூற்கும் கலை'யைக் கற்றுக்கொடுப்பதற்கு, நாசிக் நகரத்தில் ஒரு பயிற்சிசாலை அமைக்கப் போவதாகவும், அதற்காக ரூ 4 5 இலட்சம் ஒதுக்கி வைத்திருப்பதாகவும் அறிவிக்கப்படுகிறது. இதோடுகூட, ஒரு மத்திய நிலையமும், அதோடு தொடர்பு கொண்ட ஆறு எல்லைப் பகுதி நிலையங்களும் அமைக்கப்படுமாம். இவையெல்லாம் வெளியுலக மக்களுக்காகையால், சிறை உலகில் உள்ளவர்களும் கற்க வேண்டும் என்ற முறையில், அவர்களுக்குப் பயிற்சி வகுப்புக்கள் நடத்துவதற்கு வேண்டிய செலவினங்களுக்கும் அரசாங்கத்தார் அனுமதியளித்திருக்கிறார்கள்"

"கடனும், கொடையும், பயிற்சியும், கதருக்கு மூன்று கால்களாகக் கொண்டாலும், நான்காவது தாங்கும் நிலையும் ஒன்று வேண்டும் என்று கதர் நிலயத்தார் கருதினார்கள் போலும்! ஆகவே பிரசாரத்திற்காக ரூ. 5 இலட்சம் கொடுக்கும்படி கேட்டிருக்கிறார்கள். இப்பிரசாரம், கண்காட்சிச் சாலைகள் மூலமாகச் செய்யப்படுமாம். டில்லியில் ஒரு கண்காட்சியும், நாட்டின் வெவ்வேறு பாகங்களில் வேறு 13 கண்காட்சிகளும் நடைபெற வேண்டுமென்று கேட்டார்களாம். ஆனால், டில்லியில் நடக்கும் கண்காட்சி ஏற்பாட்டுச் செலவுக்கு ரூ. 10,000-மும், டில்லிக்கு வெளியில் நடக்கும் கண்காட்சிச் செலவுக்காக ரூ 1½ இலட்சமுந்தான் இந்திய அரசாங்கத்தார் நன்கொடை அளித்திருக்கிறார்கள்"

—இவ்வாறு, 'தமிழ் நாடு' இதழ் தனது தலையங்கத்தில் தீட்டியுள்ளது. மேலும், அது, குறிப்பிடுவதாவது:—

"இந்திய அரசாங்கத்தார் கதர்த் தொழிலை விருத்தி செய்வதற்காகச் சில ஆலோசனைகள் செய்து வந்தார்களென்றும், இதற்காக, இலட்சக்கணக்கான தொகைகள் கடனாகவும், கொடையாகவும் கொடுப்பதற்கு இப்போது முடிவு செய்திருக்கிறார்களென்றும், புது டில்லியிலிருந்து அண்மையில் வெளியான ஒரு செய்தி கூறுகிறது.

"ஒழுங்கானதும், பயன்தரத்தக்கவையுமான பல துறைகளும், தொழில்களும், பொருளில்லாமல் வாடுகின்ற நிலையில், இலட்சக்கணக்கான ரூபாய்களைக் கதர் என்ற வீண் முயற்சித் திட்டத்தில் விரயமாக்குவது பொதுநலத்துக்குப் புறம்பானதாகும் என்று எடுத்துக்காட்ட விரும்புகிறோம். இவ் வீண் விரய முயற்சியின் விவரங்களைச் சற்று ஆராய்வோம்.

"அனைத்திந்திய கதர் நிலையத்தாருடைய திட்டங்களை அடிப்படையாக வைத்துக் கொண்டுதான், இந்திய அர

(3-ம் பக்கம் பார்க்க)

### குறித்துக் கொள்ளுங்கள்!

சர்க்கார் விளம்பர இலாகாவின் இப்போதைய செலவு ரூ 1 30,000. அண்மையில் 23 பதவிகள் நீக்கப்பட்டன. இதற்கு முன்பு ரூ 2,15 000.

1953 ஏப்ரல் முதல் தேதியிலிருந்து சர்க்கார் உத்தியோகக் கமிஷன் நடத்தும் தேர்வுகளில் அனுமதி கோரி 30 255 மனுக்கள் வந்தனவாகவும், அந்த மனுக்கள் சம்மந்தமாக ரூ 24,21,198 கட்டணம் வசூலாயிற்று என்றும் தெரிகிறது.

### சட்டசபை உரிமைக் குழு

சென்னை, டிச. 22—

சட்டசபை உரிமைக் குழுவிற்குப் பின்வரும் உறுப்பினர்கள் நியமிக்கப்பட்டுள்ளதாக சட்டசபைத் தலைவர் இன்று அறிவித்தார்:—

தோழர்கள்: சே. பார்த்தசாரதி, எஸ். பஞ்சாட்சரம், எம். ஆர். ராமச்சந்திரன், எஸ். செல்லப்பாண்டியன், என். மவுன குருசாமி.

கோலாலம்பூர், டிச. 23—

மலேயாவில் பயங்கர இயக்கம் மீண்டும் தலைகாட்ட ஆரம்பித்துள்ளதென்றும், எஸ்டேட் முதலாளிகள் வீடுகளைப் பார்த்துச் சுடுவது, இப்போது ஆரம்பமாகியுள்ளதென்றும் கூறப்படுகிறது.

தலைவர்களுக்கு தாய்மார்கள் நடத்திய வரவேற்புக் கூட்டத்தில் தோழியர் சத்தியவாணிமுத்து அம்மையார் அவர்கள், பொதுச் செயலாளரிடம் பண முடிப்பைக் கொடுக்கும் காட்சி பக்கத்தில் அமர்ந்திருப்பவர் டாக்டர் தருமாம்பாள்.

### [illegible]ரியாத புதிர்!

★

"புதிய கல்வித் திட்டம் அமுலுக்கு வந்து ஆறு மாதங்களாகியும், ஆரம்ப ஆசிரியர்களுக்கே இத்திட்டம் இன்னும் புரியவில்லை. இவ்விதம் ஆசிரியர்களுக்கே புரியாத திட்டத்தை அமுலுக்கு வர சாத்தியமில்லாமலிருக்கிறது."

—திண்டிவனத்தில் மதுரை வட்டார கல்வி அதிகாரி கோபாலய்யர்.

'தி. நா': 23—12—'53.

## "நாட்டு மொழிக்குக் காலவரையறை குறித்தது தவறாகும்"

### "முப்பதாண்டுக்குப் பிறகும் கூட ஒரு பொருளை உருதுவில் போதிக்க முடியவில்லை"

தார்வார், டிச. 22—

"அனைத்துப் பாட போதனையையும் இந்தி மொழியில் மாற்றி விடுவது என்பது இலகுவானதல்ல. எல்லாப் பொருள்களையும் இந்தியில் போதிப்பதற்கு, அதற்குத் தேவையான நூல்கள் அம்மொழியில் கிடையாது. அம்மொழியில் சில பாட புத்தகங்களை மொழிபெயர்த்துக் கொள்வது மட்டும் போதியதாகாது. முப்பது ஆண்டுகளாக மொழிபெயர்ப்பை மேற்கொண்ட பிறகும்கூட, குறிப்பிட்ட ஒரே ஒரு பொருளைப் போதிப்பதற்கும் போதிய வகையில் உருது மொழியில் புத்தகங்களை ஆக்கிக்கொள்ள முடியாமல், உஸ்மானியா பல்கலைக் கழகம் தோல்வியடைந்திருக்கிறது"

மேற்குறித்தவாறு இங்கு கர்நாடக பல்கலைக் கழகத்தில் பேசும்பொழுது, பல்கலைக் கழக இணைப்பு நிறுவனத்தின் செயலாளர் சேம்புல் மத்தாய் விளக்கம் தந்தார்.

அவர் மேலும் கூறியதாவது:—

"ஒரு காலக்கு இந்தி மொழிக்கு இடம் கொடுத்து விட்டு ஆங்கிலம் விலகத்தான் வேண்டும். ஆனால் மொழிப் பிரச்னை குறித்து சம்மந்தப்பட்ட வரையறுக்கப்பட்டது தவறுடையதாகும்."

"இந்திமொழி நடைமுறைக்கு காலத்தை நிர்ணயம் செய்திருப்பது கூடாது. எனவே, மொழிப் பிரச்னையை இயற்கையின் தனி முடிவிற்கு விட்டு விடவேண்டும்."

புதுடில்லி, டிச. [illegible]—

"காமன்வெல்த் சர்க்கார், பாரதத்தின் [illegible] பேச்சை [illegible] [illegible]" [illegible]

நம் நாடு
தி.மு.க. தின இதழ் ஆசிரியர்: அண்ணாதுரை
சென்னை 24—12—53 வியாழன்

# ஆய்வுக் குழு!

இந்தியத் துணைக் கண்டத்தை மொழி அடிப்படையில் மாநிலங்களாகத் திருத்தியமைக்க வேண்டும் என்பது, அந்தந்த மொழியினரின் நீண்ட நாள் விருப்பமாகும். இலை மறை காயாக இருந்த இந்த விருப்பத்தைப் பெருங் குன்றளவு பெரிதாக்கி விட்டது, அகில இந்திய காங்கிரசேயாகும்.

மொழிவழியில் மாநிலங்களைத் திருத்தி அமைப்பது தான் நியாயமும், நேர்மையுமாகும் என்பதை வலியுறுத்தி வந்து, காங்கிரசையும் மொழி அடிப்படையிலேயே உருவாக்கி அமைத்துக் கொள்ளப்பட்டு, இதுவரை இயங்கியும் வந்திருக்கிறது. இந்த ஏற்பாட்டை மாற்றி அமைத்துக்கொள்ள வேண்டும் என்ற நினைப்பு, இன்றும் அகில இந்தியக் காங்கிரசுக்கு உண்டாகவில்லை என்பதை அனைவரும் அறிவர். இது எதனைக் காட்டுகிறது? மொழிவழியில் காங்கிரஸ் இயங்குவதுதான் நியாயம் என்று, காங்கிரஸ் மேலிடம் இப்பொழுதும் உறுதியாக நம்பிக்கொண்டு இருக்கிறது என்ற மறுக்க முடியாத உண்மையைத்தானே?

மொழிவழியில் பிரித்து வைத்திருப்பதால், காங்கிரசுக்குள்ளாகப் பிணக்கையும், பிளவையும், எரிவையும் உண்டாக்கி இருக்கிறது, அல்லது உண்டாக்கும் வாய்ப்பைக் கொண்டிருக்கிறது என்று இதுவரை, காங்கிரஸ் தலைவர்களில் எவரும் மறைமுகமாகவாவது முணுமுணுத்ததாகவும் காணோம். ஒரு பெரும் அரசியல் இயக்கத்துக்கு ஒத்து வந்த, ஒத்துவரும் ஒரு கொள்கை, கோட்பாடு ஒரு ஆட்சித் துறைக்கு ஒத்துவராது என்று சொல்லுவது. விசித்திரமானதாகத்தான் இருக்கிறது.

மொழிவழி இயங்குவதை ஏற்றுக்கொண்டு, தமது கட்சியையும் அவ்வழியில் இயங்கச் செய்து கொண்டு, நாட்டாட்சி முறைக்கு மட்டும் அம்மொழிவழியைப் பின்பற்ற மறுப்பதையும், அஞ்சுவதையும் பார்க்கின்ற பொழுது, இந்தியத் துணைக்கண்டத்தில் ஆட்சிபீடத்தில் ஏற்றம் பெற்றிருப்பவர்களின் நல்லெண்ணத்தில் பல மொழி வழியினருக்கும் குறிப்பிட்டுத் தருந்த அளவிற்கு ஐயம் பிறக்கும் என்பதில் ஐயமில்லை. இப்போதே இது பிறந்து அருகுபோல் வேரோடி, ஆல்போல் தழைத்து வளர்ந்து இருக்கிறது என்பதும், மேலும் வளர்ந்து கொண்டே இருக்கிறது என்பதும் நாம் காணும் காட்சியாகும்.

மொழிவழியினரைப் பிளவுபடுத்தி, ஒன்று சேரவிடாமல் தடுத்து, பல மொழியினரை ஒரு பகுதியில் அடைத்து, இந்தியத் துணைக்கண்டத்தைப் பல மாநிலங்களாக வகுத்து, மக்களுக்குள் பிளவுபடுத்தி ஆண்டுவந்தது, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம்! பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் உள்ளக்கிடக்கை, மக்களை ஒன்று சேரவிடாமல் பிரித்து வைத்து அந்த ஒற்றுமைக் குறைவில், தங்கள் சுரண்டலைத் துளியும் எதிர்ப்பில்லாமல் நடத்த வேண்டும் என்பதேயாகும். இந்தியத் துணைக் கண்டத்து மக்களுடைய இன நலனையோ, மொழி நலனையோ, தொழில் நலனையோ, வேறு பிற இன்றியமையாத நலன்களையோ பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் முக்கியமாகக் கருதி இருக்கவில்லை. தனது சுரண்டல் ஒன்றுதான் அதற்குக் குறிக்கோள். அதற்கேற்ப, மொழி வழிவந்த மக்களைச் சிறு கூறுகளாகச் சிதறடித்து, மாநிலங்களை உருவாக்கி, தனது சுரண்டலை ஒழுங்காக்கிக் கொள்ள, பரந்து கிடந்த இத் துணைக்கண்டத்தின் ஆட்சித் துறையைச் சுலபமாக்கிக் கொண்டது, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம்!

சுரண்டலையே குறியாகக் கொண்டு இந்தியத் துணைக் கண்டத்தை ஆண்டுவந்த ஏகாதிபத்தியத்திடம் நாம் வேறு எந்த நியாயத்தையும் எதிர்பார்க்க முடியாது. ஆனால், 'நமது ஆட்சி' என்று சொல்லிக் கொள்ளும் காங்கிரஸ் ஆட்சியும், ஆட்சிப் பொறுப்பைக் கைப்பற்றுவதற்கு முன் சிறப்பித்துக் கூறிவந்ததை எல்லாம் மறந்து, ஏகாதிபத்தியப் போக்கையே பின்பற்றக் கிளம்பி இருக்கிறது. இந்தப் போக்கு, காங்கிரஸ் ஆட்சியாளரிடம் மற்றவர்க்கு ஐயத்தையும், அதிருப்தியையும், ஆத்திரத்தையும்தான் உண்டாக்கும்; ஏற்கெனவே உண்டாக்கியும் இருக்கிறது.

இந்தியத் துணைக்கண்டத்திலுள்ள மாநிலங்களைத் திருத்தி அமைப்பதற்கென்று ஒரு மூவர் குழுவை யூனியன் சர்க்கார் நியமித்திருக்கிறது. அந்தக் குழுவின் தலைவராக உள்ள பாசல் அலி முன்னாள் நீதிபதியாக இருந்தவர்; இப்பொழுது, ஒரிசா மாநிலத்தின் கவர்னராக இருப்பவர்.

இரண்டு உறுப்பினர்களில் ஒருவரான இருதயநாத் குன்சுரு, பாராளுமன்ற மேல் சபை உறுப்பினராவார்; மற்றொருவரான சர்தார் கே. எம். பணிக்கர், எகிப்தில் இந்தியத் தூதுவராக இருப்பவர்.

உறுப்பினராக உள்ள இருவரும், மொழிவழியில் மாநிலங்கள் உருவாவதைத் தீவிரமாக எதிர்ப்பவர்கள். தலைவரின் கருத்து, மொழிவழி அமைப்புக்கு ஆதரவாக இருந்த போதிலும்கூட, உறுப்பினராக உள்ள இருவரின் கருத்தும் அதை மாற்றிவிடக்கூடும்.

மொழிவழி மாநில அமைப்பு ஆய்வுக் குழு என்று இந்தக் குழுவுக்குப் பெயரிடப்படவில்லை. மாநில திருத்தக் குழு என்றுதான் பெயர் தரப்பட்டு இருக்கிறது.

பெயருக்கேற்பவே, அக்குழு விசாரித்து அறிய வேண்டிய பிரச்னைகளும் பலவாகக் குறிக்கப்பட்டு இருக்கின்றன. அது, அலசிப்பார்க்க வேண்டிய பிரச்னைகளில் மொழியும் ஒன்றாக்கப்பட்டு இருக்கிறதே அல்லாமல் மொழிக்கு சிறப்பளிக்கப்படவில்லை.

குழுவின் ஆய்விற்கான கால அளவும் வேண்டுமென்றே நீட்டிக்கப்பட்டு இருக்கிறது. இந்தக் காலநீடிப்பு, மொழிவழி மாநிலக் கோரிக்கையினரின் கனத்தக் குரல் கொஞ்ச நாளைக்காவது வெளிக்கிளம்பாமல் இருக்கட்டும் என்ற ஏற்பாடாக இருக்கலாம்.

குறிப்பிட்ட காலத்திற்குள், குழு ஒரு இடைக்கால அறிக்கையை வெளியிட குழுவிற்கு அதிகாரம் தரப்பட்டும் இருக்கிறது.

குழு பெறும் சாட்சியமும் வெளிப்படையாக இருக்காது. அனைத்தும் திரைமறைவு நாடகமாக இருக்கும்.

குழுவிற்குக் கொடுக்கப்பட்டுள்ள கட்டளை எதுவாக இருந்தபோதிலும், குழுவின் முடிவு மொழிவழி மாநிலங்கள் உருவாவதற்குச் சாதகமாக இருக்காது என்பது மட்டும், குழு பிறந்தபோதே வெட்டவெளிச்சமாகி விட்டது.

ஆந்திர மாநில அமைப்பு கிளர்ச்சியின்போது நியமிக்கப்பட்ட தார் குழுவின் அறிக்கையே மொழிவழி மாநில ஏற்பாட்டைப் பலமாகக் கண்டித்திருக்கிறது. அந்தக் கண்டன அறிக்கையை, இந்தப் பாசல் அலி குழு தன் ஆய்வுக்கு ஒரு வழிகாட்டியாகக் கொள்ளத்தான் போகிறது. அந்தக் குழு முடிவு, மொழி வழியினருக்கு ஏமாற்றத்தை அளித்ததைப் போலத்தான், இக்குழுவின் முடிவும் ஏமாற்றத்தை அளிக்கப்போகிறது.

இந்திய சர்க்காரின் இந்தக் கண் துடைப்பு வேலையால் எல்லாம், மொழிவழியினர் கோரிக்கையைத் தீர்த்துக் கட்டிவிட முடியாது. ஆனால், சிறிது காலத்திற்குத் தள்ளிவைப்பதில் வெற்றி பெறக்கூடும். பின் விளைவு பயங்கரமானதாகத்தான் இருக்குமென்பதில் சந்தேகமில்லை.

குழு நியமிப்பது, அக்குழுவைக் கொண்டு மொழி வழியினர் ஆசையை அழிக்கச் சதி செய்வது என்பன போன்ற யூனியன் சர்க்காரின் செயல், அது எதிர்பார்ப்பதற்கு நேர் மாற்றமான பலனைத்தான் கொடுக்க உதவும். இதுதான் இயற்கை—வரலாறு காட்டும் பாடம்!

## சர்ச்சில்—மாலிக் சந்திப்பு

லண்டன், டிச 23—

பிரிட்டனில் சோவியத் தூதுவர் ஜேகப் மாலிக், பிரிட்டிஷ் பிரதமர் சர்ச்சிலுடன் அவரது இருப்பிடத்தில் இன்று விருந்துண்டார் என்று அறிவிக்கப்படுகிறது.

இதற்கு முன், மாலிக், பிரிட்டிஷ் அயல் நாட்டு அமைச்சர் ஈடனுடன் இலண்டனில் அயல்நாட்டுக் காரியாலயத்தில் 20 நிமிட நேரம் உரையாடினார். அதன் பின்னரே, சர்ச்சிலைச் சந்தித்தார்.

ஐசனோவரின் அணுசக்தித் திட்டத்தை ரஷ்யா ஒப்புக் கொண்டது பற்றி சர்ச்சிலும் மாலிக்கும் வாதித்திருப்பர் என்று கருதப்படுகிறது.

# லெவராண்டி பெரியா சுட்டுக் கொல்லப்பட்டார்

—[o]—

## அவருடன் சேர்ந்த — ஐவருக்கும் அதே கதி!

மாஸ்கோ, டிச. 23—

பெரியாவும், அவருடன் சேர்ந்து சதி செய்ததாகச் சொல்லப்படும் ஐவருக்கும் தீர்ப்பளிக்கப்பட்டு விட்டது.

அவர்கள் அனைவரும் சுட்டுக் கொல்லப்பட்டனர். அவர்களுடைய சொத்துக்களை எல்லாம் பறிமுதல் செய்ய வேண்டுமென்று, சோவியத் சர்க்கார் கட்டளை பிறப்பித்துவிட்டது.

# ஈ. வெ. கி. சம்பத்திற்கு

## அரூர் ஊராண்மைக் கழக வரவேற்பு

அரூர், டிச. 23—

தோழர் ஈ. வே. கி. சம்பத் அவர்களுக்கு, 28-12-53 திங்களன்று காலை 11 மணிக்கு, இவ்வூர் ஊராண்மைக் கழகச் சார்பில் ஒரு வரவேற்பளிக்கப்படும். அன்று மாலை, பெரியார் பூங்கா மைதானத்தில் நடைபெறும் தி. மு. கழகப் பொதுக்கூட்டத்தில் பேசுவார்.

## சிங்கப்பூருக்கு கப்பல் தபால்

சென்னை, டிச. 23—

கப்பல் எஸ்.எஸ். ஜலகோபால், டிசம்பர் 30-ந் தேதியன்று சென்னையிலிருந்து சிங்கப்பூருக்குப் புறப்படுகிறது. நகர கிளைத் தபாலாபீசுகளில் டிசம்பர் 29-ந் தேதி காலை 10 மணிக்கு முன்பும், ஜெனரல் போஸ்டாபீசில் அன்று மாலை 3 மணிக்கு முன்பும் போடப்படும் தபால்கள் இந்தக் கப்பலில் சேரும்.

கோலாலம்பூர், டிச 23—

ரப்பர் தொழிலாளர்களின் ஊதியம் அடுத்த மாதம் அநேகமாகக் குறைக்கப்படலாம் எனத் தெரிகிறது. ரப்பர் விலை இப்போதுள்ள குறைந்த அளவிலேயே இருந்தால் சம்பளக் குறைவைத் தவிர வேறு வழியில்லையாம்! ரப்பர் தொழிலாளர் சுமார் 3,00,000 பேர் உள்ளனர்; இவர்களில் பெரும்பாலோர் இந்தியர்.

# பர்மாவில் மார்வாடிகளுக்கு எதிர்ப்பு

## 5 லட்ச ரூபாயும் 400 கட்டி தங்கமும் சூறை!

இரங்கூன், டிச. 23—

இரங்கூனுக்கு வெளியே 9 மைல் தூரத்தில், நகைக் கடை வைத்திருந்த ராம்லால் (பம்பாய்க்காரர்) என்ற குஜராத்தியை நேற்று ஆயுதமாணிகளான அடையாளம் தெரியாத பேர் வழிகள் சுட்டுக் கொன்று விட்டதாக இன்று போலீசார் தெரிவித்தனர்.

ராம்லால், ரங்கூனில், நகைக் கடை ஒன்று நடத்தி வந்தார். அவர் வாழ்ந்த இடம், 'ஓ...' என்பதாகும். கொலைஞர்கள் ராம்லாலின் இல்லம் புகுந்து அவரைச் சுட்டுக் கொன்றனர்; அவருடைய மனைவியைப் படுகாயப் படுத்தினர்

5 லட்ச ரூபாயும், 400 கட்டித் தங்கமும் அவர்களால் தூக்கிச் செல்லப்பட்டன. கொள்ளைக்காரர்கள், ராம்லாவின் மகனைச் சுட்டது குறி தவறிவிட்டது.

கொள்ளைக்காரர்கள் சொத்துக்களைக் கொள்ளையிட்ட போது, ராம்லாலையும், அவரது மனைவியையும் கயிற்றால் கட்டிவிட்டதாகச் சொல்லப்படுகிறது.

ஒரு வாரத்திற்கு முன்பு, மாந்தலேக்கு 30 மைல் தூரத்திலுள்ள மற்றொரு நகை வியாபாரியும் கொலை செய்யப்பட்டுக் கிடந்தார்.

## பாரி கம்பெனியில் அடையாள வேலை நிறுத்தம்

சென்னை, டிச. 23—

சென்னை பாரி கம்பெனியில் இன்று 500 சிப்பந்திகள் வேலை நிறுத்தம் செய்ததாக, பொதுவுடைமை சார்புள்ள தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ் செயலாளர் எஸ். பாஸ்கரன், அனைத் தலைவர்கள் கே. டி. கே. தங்கமணி, எஸ். கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் அறிவிக்கிறார்கள்.

# ஆண்டிலோர் விழா தைப்பொங்கல்!



## தீண்டாமையை வேருடன் களைய மசோதா

புதிய யோசனைகளை சர்க்கார் ஏற்றது

புதுடில்லி, டிச. 24—

தீண்டாமையை அடியோடு ஒழித்துக் கட்ட இந்திய சர்க்கார் கொண்டு வந்துள்ள சட்டத்தில் தாழ்த்தப்பட்டோர் மலைஜாதியினர் ஆகியோர் நிறுவனங்கள் தெரிவித்துள்ள யோசனைகளும் சேர்க்கப்பட்டு, மசோதா திருத்தியமைக்கப்பட்டு வருகின்றன. மக்கள் சபையின் அடுத்த கூட்டத் தொடரில், இம்மசோதாவை கொண்டுவரப்படுமென எதிர்பார்க்கப்படுகிறது.

இம் மசோதாவின்படி, தீண்டாமை, நியாய விசாரணைக்குட்பட்ட குற்றமாகக் கருதப்படும். தீண்டாமையை அனுசரிக்கத் தூண்டுபவர்களும் அதன்படி குற்றம் செய்தவர்களேயாவர்கள்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினர், நிர்ப்பந்தமான வேலைகளுக்கு உபயோகிக்கலாகாது என்றும் இம்மசோதா எச்சரிக்கிறது.

இந்திய அரசியல் சட்டப்படி, தீண்டாமை என்பது ஏற்கனவே ஒழிக்கப்பட்டு விட்டது; ஆனால், அதை சட்ட பூர்வமாக அமுல் நடத்தும் பொருட்டே இப்போது இம் மசோதா கொண்டு வரப்படுகிறது.

இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும்போதோ, அல்லது, கோர்ட்டுகள் உத்தரவு பிறப்பிக்கும் போதோ, வழக்கத்தில் இருந்தது — தொன்றுதொட்டு பின்பற்றப்பட்டு வந்தது — ஆகியவைகள் எல்லாம் கவனிக்கப்படமாட்டாது.

## "அணுகுண்டை தடை செய்ய வேண்டும்"

ஐசனோவரின் கருத்துக்கு ரஷ்யா பதில்

மாஸ்கோ, டிச 23—

ஐக்கிய நாடுகள் சபையில் ஜனாதிபதி ஐசனோவர் கூறிய கருத்துப்படி, அணுசக்தி பிரச்சினை பற்றி இரகசியமாகவோ ராஜதந்திர அளவிலோ பேச்சு வார்த்தை நடத்தத் தயார் என்று ரஷ்ய சர்க்கார் நேற்று அறிவித்தது. ஆனால், அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டு ஆகியவற்றிற்குத் தடை விதித்தால்தான், அணுசக்தியை ஆக்க வேலைக்குப் பயன்படுத்த முடியுமென்றும், அப்போதுதான் அதில் வெற்றிகாண முடியுமென்றும் ரஷ்யா அறிவித்துள்ளது.

அணுகுண்டு யுத்தம் ஏற்படக் கூடுமென மக்கள் மருளுகிறார்கள்; அணுகுண்டுக்குத் தடை விதிக்காவிடில், அணுகுண்டு யுத்தத்தைத் தடுக்க இயலாதென ரஷ்யா நம்புகிறது.

## கழகக் கூட்டம்

★

சங்கரநயினார்கோவில்

25—12—53 வெள்ளிக்கிழமை இரவு 8 மணிக்கு

இடம்: மாதாங்கோவில் தெரு, பன்னீர்செல்வம் திடல்

தலைவர்: டி. ஆர். சுப்ரமணியம்

பேசுவோர்:

அருண்மொழி

பூங்கோதை

## நாடகம்

சென்னை, டிச. 24—

...பெரியார் அளிக்கும் முதல் ...மான "போர்க்களம்" 25—12—53 வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு, சென்னை சௌந்தர்ய மஹாலில் நடைபெறும்.

# ஆச்சாரியார் பதவி காலம் நீளுகிறது

## டிச. 27-ல் சட்ட சபை காங்கிரஸ் கட்சிக் கூட்டம் நடைபெறுதாம்!

சென்னை, டிச 24—

தமிழ் நாடு காங்கிரஸ் குழுத் தலைவர் காமராஜரும், முதலமைச்சர் ஆச்சாரியாரும் நேற்று காலை சந்தித்துப் பேசினர். சட்டசபை முன் வரவிருக்கும் சிலவற்றைப் பற்றி அவர்கள் பேசியதாகத் தெரிகிறது.

இன்று மாலை 5-30 மணிக்கு சட்டசபைக் காங்கிரஸ் கட்சியின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் நடைபெறும். சட்டசபை இனி கவனிக்க வேண்டியிருக்கும் விஷயங்களைக் கமிட்டி ஆலோசிக்குமென தெரிய வருகிறது.

27-ந் தேதி சட்டசபை காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடைபெறுவதாக இருந்தது. இப்போது விசாரித்ததில் இக்கூட்டம் நடைபெறாது என்றும், ஜனவரி முதல் வாரத்தில்தான் நடைபெறலாம் என்றும் தெரிகிறது.

26-ந் தேதி அசெம்பிளி கலைந்து, மறுபடியும் ஜனவரி 4-ந் தேதி கூடுவதாக இருப்பதாலும், 27-ந் தேதி வாக்கில், காமராஜர் ...யில் இருக்க வேண்டியிருப்பதாலும், சட்டசபைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டம் ஒத்தி வைக்கப்பட்டதாகத் தெரிகிறது.

அசெம்பிளியில் தற்போது விவாதிக்கும் அரிசி கன்ட்ரோல் நீக்கத்திற்குப் பிறகு கல்வி இலாகா மானியம் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும். புதிய ஆரம்பக் கல்வித் திட்டம் விவாதத்தில் முக்கிய இடம் பெறலாம்; ஆனால், இது பற்றி காங்கிரஸ் கட்சியில் ஒரு விதத் தகராறும் இராது என்றும், கட்டுப்பாடாக இருந்து மானியம் நிறைவேற்றப்படும் என்றும் உறுதியாகக் கூறப்படுகிறது.

## இந்தியாவில் விஞ்ஞானக் காங்கிரஸ்

கல்கத்தா, டிச. 23—

ஐதராபாத்தில் அடுத்த மாதம் நடைபெறும் இந்திய விஞ்ஞானக் காங்கிரசில் கலந்து கொள்ள வரும்படி அயல்நாடுகளின் பிரபல விஞ்ஞானிகள் அழைக்கப்பட்டுள்ளனர். 9 விஞ்ஞானிகள் ஏற்கனவே அழைப்பை ஏற்றுவிட்டனர். ஜப்பான், சீனா, ரஷ்யா இலங்கையிலிருந்தும் விஞ்ஞானிகள் வருகின்றனர்.

# கோதுமைக் கிடங்கு முன் மறியல்!

## பற்றாக்குறைப் பகுதிகளுக்கு ஏற்றுமதி கூடாதாம்

பிகானீர், டிச. 22—

ராஜஸ்தானிலிருந்து பற்றாக்குறைப் பகுதிகளுக்கு கோதுமை ஏற்றுமதி செய்யக்கூடாது என பிரஜா—சோஷலிஸ்டு கட்சியினர், இங்கு மறியல் ஆர்ப்பாட்டத்தில் இறங்கி உள்ளனர்.

அந்த சர்க்கார், தன் வசமுள்ள கோதுமையில் 1,7,6000 மணங்களை வெளிப் பகுதிகளுக்கு ஏற்றுமதி செய்யப்போவதாக அறிவித்தது.

இந்த அறிவிப்பின்படி கிடங்கின் இருந்து முதல் தடவையாக கோதுமை மூட்டைகளை மோட்டார் லாரியில் ஏற்றினர்.

பி. எஸ். பி. ஊழியர்கள் லாரியின் முன்பாகப் படுத்துக் கொண்டு தடைசெய்தனர். ஏற்றின மூட்டைகள் இறக்கிவிடப்பட்டன. ஏற்றுமதிக் கொள்கையை சர்க்கார் கைவிடவேண்டுமென்றும், சர்க்கார் அறிக்கையின் விளைவாக கோதுமை விலை அப்பகுதியில் உடனடியாக விலையேறிவிட்டதாகவும் பிரஜா சோஷலிஸ்டுகள் சார்பில் அறிவிக்கப்பட்டது.

## முட்டை உற்பத்தியில் சென்னைக்கு ரிகார்ட்!

புதுடில்லி, டிச. 23—

தென்னிந்தியாவில் கோழி வளர்ப்பு மிகப் பிரபலமாக இருந்து வருகிறது. ஆந்திரா உட்பட்ட சென்னை மாநிலம் அதிக முட்டைகளை உற்பத்தி செய்துள்ளது. சமீபத்தில் எடுக்கப்பட்ட கணக்கின்படி ஆண்டில், 108,51,66 380 கோழி முட்டைகளும், 25 59,83,870 வாத்து முட்டைகளும் இடப்பட்டுள்ளன.

## இந்திய ஊறுகாய்களுக்கு உலகமெங்கும் கிராக்கி

புதுடில்லி, டிச. 23—

இந்திய ஊறுகாய்கள், சட்னி, வற்றல் இவைகள், எல்லா நாடுகளின் மார்க்கெட்டுகளையே கைப்பற்றியிருக்கின்றன.

சென்ற ஆண்டு ஏற்றுமதி செய்யப்பட்ட இந்தசரக்குகளின் மதிப்பு, 23 லட்சம் ரூபாய் ஆகும்.

## "இலட்சங்கள் செலவானாலும்........

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

சாங்கத்தார் பல முடிவுகளுக்கு வந்ததாகத் தெரிகிறது. அவைகளில் ஒன்று, சேவாக் கிராமத்தில் உள்ள 'சர்வ சேவா சங்கத்'துக்கு ரூ. 95 இலட்சம் கடனாகக் கொடுக்கவேண்டும் என்பதாகும்.

"பஞ்சு, பட்டு முதலிய நூல் வாங்குவதற்கும், அரசாங்கத்தாருக்குக் கதர்த் துணிகள் தேவையான அளவுக்குக் கொடுப்பதற்கும், விலை மிகக் குறைவாக இருக்கும் காலங்களில், சில கதர் நிலையங்களிலிருந்து ஈடுசெய்து வாங்குவதற்கும், இக் கடன் தொகை பயன்படுத்தப்படும். இதல்லாமல், புதிய கதர்ப் பண்டக சாலைகள் திறப்பது, கதர்த் துணி நெய்வதற்காக வேண்டிய முதற் கருவிகளும் அனைக் கருவிகளும் உற்பத்தி செய்வது ஆகிய காரியங்களும் இத் தொகையிலிருந்து செய்யப்படும்.

"கதர் நிலையத்தார் தமக்காகக் கடன் வாங்கியதோடு நில்லாமல், தம்முடைய ஆதிக்கத்திலுள்ள சிறு சிறு நிலையங்களுக்குக் கடன் கொடுப்பதற்காக ரூ. 30 இலட்சம் வாங்கியிருக்கிறார்கள். மேலும், பதிவு செய்யப்பட்ட அநேக கதர்ச் சங்கங்களுக்குக் கடனாகக் கொடுக்கப்பட்ட தொகைகள் ரூ 31 இலட்சமாகும், இக்கடன்களல்லாமல், கதர் வாணிபம் செய்வதற்காக, ரூ 65 இலட்சம் கதர் நிலையத்தாரிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

"கடன் கணக்கு இவ்வாறிருக்கிற தென்றால், நன்கொடைக் கணக்கும் வியப்பைத் தரும் தன்மையதாய்த் தானிருக்கிறது. 1953-54-ல் விற்பனையாகும் எல்லா கதர்த் துணிகளுக்கும் மூன்றணா தள்ளுபடி செய்யவேண்டுமென்று கதர் நிலையத்தார் கூறிய ஆலோசனையை இந்திய அரசாங்கத்தார் ஒப்புக் கொண்டிருக்கிறார்களாம் இந்த வகையில், ரூ 56 25 இலட்சம் கதர் நிலையத்துக்கு நன்கொடை கொடுக்கப்படும் இதற்கு முன், இதே காரியத்துக்காகக் கொடுக்கப்பட்ட தொகைகளின் மொத்த எண்ணிக்கை ரூ. 26 இலட்சம் என்று சொல்லப்படுகிறது. கதர் உற்பத்தி செய்யும் நிலையங்களுக்குக் குறைந்த விலைக்குக் கருவிகள் வாங்கிக் கொடுத்த வகையில், ரூ. 2 75 இலட்சம் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

# கிரிமினல் சட்டத் திருத்த மசோதா

## அமைச்சர்களுக்கும், அதிகாரிகளுக்கும் சட்டப் பாதுகாப்பு

புதுடெல்லி டிச 22—

இப்போதைவிட அதிதமாகவும், குறைந்த செலவில், சிக்கலான நடைமுறை இல்லாமலும் நியாயம் வழங்குவதற்காக 1898-ம் ஆண்டு கிரிமினல் சட்டத்திற்கு ஒரு திருத்த மசோதாவை பிரத்தியேக கெஜட்டில் இந்திய சர்க்கார் வெளியிட்டிருக்கிறது.

திருத்த மசோதாவின் முக்கிய நோக்கங்கள்:—

(1) அசெஸ்ஸர்கள் துணையுடன் விசாரணை நடத்தும் முறை ஒழிக்கப்படும்.

(2) செஷன்சுக்குக் கமிட்டி செய்யும் முறை ஒழிக்கப்படும் மாஜிஸ்திரேட் ஒருமுறையும், செஷன்ஸ் நீதிபதி ஒருமுறையும் விசாரிப்பதற்குப் பதிலாக ஒரே படியாக செஷன்ஸ் நீதிபதியே விசாரிக்க ஏற்பாடு செய்யப்படும். தனிப்பட்டோரின் புகார்களில் மாத்திரம் மாஜிஸ்திரேட் விசாரணை நடத்துவார்.

அரசாங்க ஊழியர்கள்பற்றி அவதூறாக எழுதுவது, நடிக்கப்படும். இக்குற்றங்கள், போலீசார், தாங்களே வழக்குத் தொடரக்கூடிய குற்றங்களாகக் கருதப்படும். அமைச்சர்கள், ...கள் ஆகியோர் அரசாங்க ஊழியர்களின் பட்டியலில் சேர்க்கப்படுவர்.

(4) ஜூரர்கள் முறை எல்லா இடங்களிலும் வைத்துக்கொள்ள மசோதா விரும்புகிறது. ...களும் ஜூரர்களாகலாம்.

(5) பொய்ச் சாட்சியம் கூறுவோர் தண்டிக்கப்படுவர்.

(6) விசாரணைகளில் அனுவசியமாக வாய்தா போடும் முறை தடுக்கப்படும்.

# 2 லட்சம் நெசவாளர்கள் பட்டினி

—— (:) ——

## பீகார் கைத்தறியாளரின் அவலநிலை

பாட்னா, டிச. 23—

ஏறத்தாழ 2 லட்சம் நெசவாளர்கள் பட்டினி கிடக்கும் நிலையைப் பெற்றுள்ளனர். கைத்தறித் தொழிலில் ஏற்பட்டுள்ள வேலையில்லாத் திண்டாட்டமே இந்த அவல நிலைக்குக் காரணம் என்று கூறப்படுகிறது.

பீகார் மாநில கைத்தறியாளர் காங்கிரஸ் இதுபற்றி மிகுந்த பரபரப்படைந்திருக்கிறது. ரூ. 30 லட்சம் செலவில் ஒரு நூல் நூற்பு ஆலையைத் துவங்க வேண்டுமென்று பீகார் சர்க்காரை அது கேட்டிருக்கிறது.

பீகார் சர்க்கார், இத்துறையில் ரூ. 45 லட்சம் செலவிடுவது என்று தீர்மானித்து இருக்கிறது.

அகில இந்திய நெசவாளர் சேமிப்பு நிதியிலிருந்து இம் மாகாணத்திற்கு ரூ. 78 லட்சம் 1953—54-ம் ஆண்டிற்காக ஒதுக்கப்பட்டு இருக்கிறது.

1953 ஜனவரி முதல் இதுவரை 20,17,850 டன் உணவுப் பொருள் இறக்குமதி செய்யப்பட்டது. (இதில் கோதுமை 16,12,600 டன்களாகும்)

அடுத்த ஆண்டு கொள்முதல் மூலம் 19,61,000 டன் கிடைக்குமாம் என எதிர்பார்க்கப்படுகிறது.

## இந்தியாவின் அரிசி சேமிப்பு

உணவு மந்திரி அறிவிப்பு

புதுடில்லி, டிச. 23—

இந்தியாவின் அரிசி சேமிப்பு, பற்றாக்குறை பிரதேசங்களின் தேவையைப் பூர்த்தி செய்யப் போதுமானதாக உள்ளதென்று மத்திய சர்க்கார் உணவு மந்திரி அறிவித்துள்ளார்.

இவ்வாண்டு முடிவிற்குள் அரிசி இறக்குமதி எதுவும் இராது.

★

## கம்பு சாகுபடி

1953—54-ம் ஆண்டிற்கான கம்பு சாகுபடி பற்றிய அகில இந்திய முதல் மதிப்பீட்டின்படி, நடப்பு ஆண்டில் சாகுபடி விஸ்தீரணம் 2 65 14,000 ஏக்கராக இருக்குமென்று தெரிய வருகிறது. 1952—53-ம் ஆண்டிற்கான திருத்தப்பட்ட முதல் மதிப்பீட்டில் சாகுபடி விஸ்தீரணம் 2,31,54,000 ஏக்கராவாக இருந்தது. எனவே, நடப்பு ஆண்டில் சாகுபடி விஸ்தீரணம், 33,60,000 ஏக்கராவாக இருக்கும்.

★

## எள்ளு சாகுபடி

1953—54-ம் ஆண்டிற்கான எள்ளு சாகுபடி பற்றிய அகில இந்திய இரண்டாவது மதிப்பீட்டின்படி, நடப்பு ஆண்டில், 43,93,000 ஏக்கராவில் எள்ளு சாகுபடி செய்யப்பட்டிருப்பதாக தெரிய வருகிறது. முந்திய ஆண்டின் திருத்தப்பட்ட மதிப்பீட்டில் சாகுபடி விஸ்தீரணம் 42,19,000 ஏக்கராவாக இருந்தது. எனவே, நடப்பு ஆண்டில் சாகுபடி விஸ்தீரணம் 1,74,000 ஏக்கராவாக இருக்கும்.

# அன்று உடுப்பதும் கைத்தறியே!!

# தியாகி நிலம் பெற உண்ணா நோன்பு ஏற்கப் போகிறாராம்!

## வாங்கிய நிலத்திற்கும் இருவருக்குள் வழக்காம்!

வேலாயுதம்பாளையம், டிச. 21— திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த வேலாயுதம் பாளையம் தோழர் பி. அருணாசலம் அவர்கள் (தமிழ்நாடு காங்கிரஸ் பொதுக் குழு உறுப்பினர்), 31—12—53-ந் தேதிக்குள், தமக்கு தியாகி நிலம் அளிக்கப்படவில்லையானால் 1—2—53 முதல் திருச்சி மாவட்ட கலெக்டர் அலுவலகத்திற்கு முன்னால் சாகும்வரை உண்ணாவிரதமிருக்கப் போவதாக சென்னை முதலமைச்சருக்குத் தெரிவித்துள்ளார்.

அவர், முதலமைச்சருக்கு எழுதியுள்ள இறுதிக் கடிதத்தில், தியாகி என்ற முறையில் தனக்கு இரண்டு ஏகர் நிலம் அடமானம் செய்யப்பட்டிருந்ததாகவும், அந்நிலத்தை எம். கே. மருதமுத்து என்பவர் (இவரும் ஒரு தியாகியே) ஆக்கிரமித்துக் கொண்டுள்ளதாகவும், சர்க்கார் அதிகாரிகள் தனக்கு நிலத்தை மீட்டுத் தருவதற்குப் பதிலாக, மேற்படி மருதமுத்துவுக்கே உதவியாக இருப்பதாகவும், முதலமைச்சர் இதில் கவனம் செலுத்தி நிலத்தை மீட்டுத் தரவேண்டுமெனவும், 31—12—53-ந் தேதிக்குள் அவ்விதம் செய்யத் தவறினால், 1—2—53 முதல் திருச்சி மாவட்ட கலெக்டர் அலுவலகத்திற்கு முன்னால் சாகும்வரை உண்ணா நோன்பிருக்கப்போவதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

இதன் நகல்களை சம்பந்தப்பட்ட காங்கிரஸ் கமிட்டிகள், ரெவின்யூ அதிகாரிகள் ஆகியோருக்கும் 21—12—53-ம் தேதி அனுப்பப்பட்டுள்ளதாக நமது நிருபரிடம் அவர் தெரிவித்தார். (ந. நி.)

### மேலக்கற்கண்டார்கோட்டை தி.மு.கழக ஆண்டு விழா

13—12—53ல், பொன்மலை—மேலக் கற்கண்டார் கோட்டை தி. மு. கழக 3-வது ஆண்டு விழா தோழர் எஸ். கான்முகம்மது தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் எஸ். சேமோகன், சிவப்பிரகாசம் பி. ஏ., தோழியர் அருள்மொழி பி ஓ. எல்., ஆகியோர் திராவிட முன்னேற்றக் கழக இலட்சியம் பற்றியும்; அரியக்குடி, கல்லக்குடி வழக்கு பற்றியும் விரிவுரையாற்றினர். அரியக்குடி வழக்கு நிதிக்கு கூட்டத்தில் உண்டியல் மூலம் வசூலான ரூ. 6-0-5யை தோழியர் அருள்மொழி அவர்கள் வசம் ஒப்படைக்கப்பட்டது.

விழாவில், கழகச் செயலாளரால் ஆண்டு அறிக்கை வாசிக்கப்பட்டது. தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன.

### கைத்தறி துணி உற்பத்தியாளர் சங்கம்

சேலம் குகை கைத்தறி துணி உற்பத்தியாளர் சங்கத்தின் 9-வது வருஷாந்திர மகா சபைக் கூட்டம் சேலம் குகை ராமலிங்க சௌடேஸ்வரியம்மன் தர்மமடாலய சமரச சன்மார்க்க சபைக் கட்டிடத்தில், 13—12—53-ல், மேற்படி சங்கத்தின் 9-வது ஆண்டு மகா சபைக் கூட்டம் தோழர் வி. வி. பி வெங்கடாசலம் தலைமையில் நடைபெற்றது. ஆண்டு அறிக்கை வாசிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டதுடன், சங்கத்தின் 10-வது ஆண்டிற்குப் புதிய நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### ஆத்தூர் வட்டக் குழு தேர்தல்

சேலம், டிச. 22— ஆத்தூர் வட்டக் குழு தேர்தல் தோழர் எம். பி. சுப்பிரமணியம் பி. ஏ., எம். எல். ஏ., தலைமையில் நடைபெற்றது. கீழ்க்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

சொலாளர்: என். கே நல்லவரண்டு, துணைச் செயலாளர்: வி. எம். சன்னியாசி; பொருளாளர்: கே. நாராயணசாமி; மாவட்டப் பிரதிநிதி என். கப்பாவு; கழக முழு நேரத் தொண்டர்களாக தோழர்கள் ஏ. என். அன்பழகன், என். கே. ராசு ஆகியோர் நியமிக்கப்பட்டனர்.

### தெ. இ. ஆதிதிராவிட மகாஜன சங்கம்

பம்பாய், டிச. 19— 12—12—53ல், மேற்படி சங்க நிர்வாகக் கழக உறுப்பினர் கூட்டம், தாராவியில், தோழர் ஒ. த. அப்பாசாமி தலைமையில் நடைபெற்றது. பல அனுதாபத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. செயல் குறிப்புகள், வரவு-செலவு கணக்குகள், கடித போக்கு வரத்துகள், மற்றும் நிர்வாக சம்பந்தமான காரியங்களும் கவனிக்கப்பட்டன.

### தோழர் கருணாநிதிக்கு வரவேற்பு அளிக்க முடிவு

புதுக்கோட்டை, டிச. 23— புதுக்கோட்டை திருவள்ளுவர் நகர் தமிழர் வாசகசாலையின் செயற்குழுக் கூட்டம், 20—12—53ல், தலைவர் எம். ஐ னார்முகம்மது இல்லத்தில் நடைபெற்ற போது, 1954ம் ஆண்டு ஜனவரி மூன்றாம் வாரத்தில் புதுக்கோட்டைக்கு வர இருக்கும் மு. கருணாநிதி அவர்களுக்கு வாசகசாலையின் சார்பில் வரவேற்பு அளிப்பதென்று தீர்மானம் நிறைவேறியது. கூட்டத்திற்கு எம். ஐ னார்முகம்மது தலைமை வகித்தார்.

### தென் சங்கம்பாளையத்தில் பொதுக் கூட்டம்

19—12—53ல், தி. மு கழகத்தின் சார்பில். திரு. வி. க. திடலில், தோழர் எஸ். வி. அரசு தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர் ஏ. வி பி. ஆசைத்தம்பி அவர்கள், தி. மு. கழகத்தின் கொள்கைகளை விளக்கிச் சொற்பொழிவாற்றினர்.

### விற்பனை வரிக்கு எதிர்ப்பு

கோவை மளிகை வியாபாரிகள் சங்கத்தின் மகா சபைக் கூட்டம் 18-12-53ல், சங்க உபதலைவர் ஜனாப் டி கே. முகமது கனி ராவுத்தர் அவர்கள் தலைமையின் கூடி, சென்னை சர்க்காரின் பலசரக்கு விற்பனைவரி முறையினின் இன்னல்களைக் குறித்து தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### திருமணங்கள்

15—12—53ல், மேலச் சண்முகபுரத்தில், தோழர் டி தேவதாசுக்கும், தோழியர் பேச்சியம்மாளுக்கும் நடந்த வாழ்க்கை ஒப்பந்தத்தின் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 2 நன்கொடை அளிக்கப்பட்டது— வரப்பெற்றோம் — நன்றியுடையது— பொறுப்பாளர்.

★

ஒளரமங்கலம் தோழர் இ. பரமசிவன் அவர்களுக்கும் தோழியர் சோமதிபம்மாளுக்கும் 11—12—53ல், திருமணம் நடந்தேறியது. அன்பளிப்பாகத் தோழர்கள் பணம், மலர் மாலைகளும், இயக்க ஏடுகளும் வாழ்த்து மலர்களும் அளித்தனர். இதன் நினைவாக "நம் நாடு" வளர்ச்சிக்கு ரூ 1 அளிக்கப்பட்டது— வரப் பெற்றோம் — நன்றியுடையது—பொறுப்பாளர்.

★

சடையாம்பட்டி தோழர் சே. மாசமுத்து அவர்களின் இளைய புதல்வர் தோழர் சேதுராமலிங்கத்திற்கும்தோழர் ப. முத்தையா அவர்களின் புதல்வி ராசலெட்சுமிக்கும் 9—12—53 இரவு 10-மணிக்கு திருமணம் நடைபெற்றது. அதுபோது தோழர்கள் மலர் பரிசுகள் வழங்கினர் இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ 3 நன்கொடை அளிக்கப்பட்டது. — வரப்பெற்றோம்-நன்றியுடையது--பொறுப்பாளர்.

★

உறையூர் தி. மு. கழகத் தோழர் பி. ராசுக்கும், தோழியர் புஷ்பத்திற்கும் 13-12-53ல், தோழர் ... செம்மான் தலைமையில் சீர்திருத்தத் திருமணம் நடைபெற்றது. அதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ 1 அனுப்பப்பட்டது. — வரப்பெற்றோம்-நன்றியுடையது-பொறுப்பாளர்.

### பிறப்பு

வட சென்னை அழகிரி படிப்பக செயலாளர் தோழர் செ. சடையப்பன் வாழ்க்கைத் துணைவியார் இராணி அம்மைக்கு 17—12—53ல், பெண் குழந்தை பிறந்தது; தாயும் குழந்தையும் நலம். குழந்தைக்கு, 'தமிழரசி' எனப் பெயர் இடப்பட்டது. இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ 1. நன்கொடை அளிக்கப்பட்டது.—வரப் பெற்றோம்-நன்றியுடையது-பொறுப்பாளர்

★

12—12—53ல், ஆத்தூர். தி. மு. கழகப் பிரமுகர் தோழர் கே. டி. சின்னப்பா அவர்கள் துணைவியார் தோழியர் கமலாவிற்கு ஆண் மகவு பிறந்தது. தாயும் சேயும் நலம்.

# தோழர் மதியழகனுக்கு கணியூரில் பாராட்டு

16—12—53 புதன் மாலை 6 மணியளவில் தோழர் கே. ஏ. மதியழகன் அவர்களைப் பாராட்ட ஒருமாபெரும்பொதுக் கூட்டம் அழகிரி திடலில் நடைபெற்றது. உடுமலைத் தோழர் அரை அவர்கள் தலைமை வகித்தார். தோழர்கள் நாராயணன், மற்றும் பல தோழர்கள் பாராட்டிப் பேசினர்.

தோழர் மதியழகன் நன்றி தெரிவித்தும், இன்றைய அரசியல் நிலை பற்றியும் பேசினார். அழகிரி மன்றம், இளைஞர் அறிவகம், தி. மு. கழகம் ஆகியவற்றின் சார்பில் மலர் மாலைகள் சூட்டப்பட்டன. அன்று மாலை, அழகிரி மன்றத்திலிருந்து ஒரு மாபெரும் ஊர்வலம் வந்தது.

### முத்துப்பேட்டையில் கருணாநிதிக்கு வரவேற்பு

முத்துப்பேட்டை, டிச. 22— திருவாரூரிலிருந்து போராணி செல்லும் வழியில் இன்று காலை 10—48 மணிக்கு, முத்துப்பேட்டை ரயில் நிலையத்தில் தோழர்கள் மு. கருணாநிதி, முல்லை-சத்தி ஆகிய இருவருக்கும் தி. மு. கழகச் சார்பில், தோழர் ந. தருமலிங்கம் மாலையிட்டு வரவேற்றார். மற்றும் பேட்டை கீழ நம்மங்குறிச்சி கழகத்தின் சார்பிலும் மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டன. தோழர் கருணாநிதி எல்லோருக்கும் நன்றி தெரிவித்தார்.

# சென்னையில் திராவிடர் திருநாள்

★

திராவிடர் திருநாளான பொங்கல் விழா, இந்த ஆண்டு, சென்னையில் மிகச் சிறந்த முறையில் நடக்க இருக்கிறது. அதற்கான முயற்சிகளில் தோழர்கள் முனைந்து விட்டார்கள். தோழர் அண்ணாதுரை அவர்களும், மற்றும் கழகப் பேச்சாளர்களும் கலந்து கொள்ள இருக்கிறார்கள்.

உடற் பயிற்சி விளையாட்டுக்கள், திராவிடப் பண் நடனம், இளைஞர்களின் இசை நிகழ்ச்சிகள், சிறுவர் சிறுமியர் பேச்சுப் போட்டி, பகுத்தறிவு நாடகங்கள், முதலியன திருநாளின் சிகரமாக அமையும்," என்று, சென்னை மாவட்ட தி. மு. கழக செயலாளர் தோழர் கே. எம். கண்ணபிரான் தெரிவிக்கிறார்.

### அம்பேத்கார் சங்கம்

13—12—53ல், நடந்த மேற்படி சங்கத் தேர்தல் கூட்டம் தோழர் ஏ. ஆபிரகாம் தலைமையில் நடைபெற்றது. அதுசமயம் தோழர்கள் எஸ் ஏ. தாசன் தலைவராகவும், ஆர். பிரான்சிஸ் செயலாளராகவும், ஏ விண்டர் பாஸ்டர் துணைத்தலைவராகவும், டி. சிவமூர்த்தி துணைச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### செயங்கொண்ட சோழபுரத்தில் பொங்கல் விழா

★

பொங்கல் விழா திருநாளை இவ்வாண்டு சிறப்பான முறையில் 14, 15, 16—1—54 ஆகிய நாட்களில் நடத்துவதாகத் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. இவ்விழாவை பொட்டி மாணவர்கள் சொற்போட்டி, கைபந்துப் போட்டி, மாணவிகள் கும்மி கோலாட்டம் முதலிய வகையில் பரிசுகள் வழங்க தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

### கடலூர் நகர கழக தோழர்கட்கு

இவ்வாண்டு பொங்கல் விழாவை-திராவிடர் திருநாளாகக் கொண்டாடச் சிறந்த ஏற்பாடுகள் நடைபெற்று வருகிறது. அதில் ஒரு பகுதி-நகரின் பல பகுதிகளிலும் கொடியேற்றுவது.

நகர எல்லைக்குள், விழாவன்று காலை, தோழர் கருணாநிதி அவர்கள் கொடியேற்றுவிப்பார்:

பெருவாரியான அளவில் கொடியேற்று விழாவாற்ற அந்தந்தப் பகுதித் தோழர்கள் ஆவன செய்வதற்கு, விழாச் செயலாளருக்குத் தெரிவிக்க வேண்டுகிறேன் என்று, செயலாளர் மு. சீனிவாசன் அறிவிக்கிறார்.

### "சேவைக்குப் பரிசு?"

சூலூர் சண்முக விலாஸ் டாக்கீசில், 9—1—54 சனி இரவு 10-30 மணிக்கு, தோழர் இரா. நெடுஞ்செழியன் தலைமையிலும், சூலூர் பஞ்சாயத்துபோர்டு துணைத் தலைவர் முன்னிலையிலும், 'சேவைக்குப் பரிசு' என்னும் நாடகம் நடைபெறும். இதில் கிடைக்கும் நிதி, தாளமுத்து — நடராசன் படிப்பகத்திற்குப் பயன்படுத்தப்படும்.

# இரங்கற்செய்திகள்

'காங்கேயம் கவியரசு அரங்க. வெங்கடாசலம் பிள்ளையவர்கள் 6—12—53ல், இயற்கையெய்தினார் என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன்' என்று ச. சபாபதி அறிவிக்கிறார்.

* * *

'கோடம்பாக்கம் தி.மு கழகத்தில் பணியாற்றி வந்த தோழர் ச. நடேசன் அவர்கள், 3—12—53-ல். இயற்கையெய்தினார், அன்னார் குடும்பத்தாருக்கு ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம் என்று புலிபாசு அறிவிக்கிறார்.

* * *

கண்ணனூர் தி. மு. கழகச் செயலாளர் தோழர் வி. அப்பாதுரை அவர்கள் 26—11—53-ல், இயற்கை அடைந்ததை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்வதாக, கண்ணனூர் தி மு. கழகத் தோழர்கள் அறிவிக்கின்றனர்.

* * *

வண்ணை, தமிழ் இளைஞர் கழக முன்னாள் துணைத் தலைவர் தோழர் த. சேதுராசன் அவர்களின் பெண் மகவு 29-11-53ல், இயற்கையடைந்தமை குறித்து கழகம் வருந்துகிறது.

* * *

வட சென்னை தியாகராயர் பகுத்தறிவு மன்ற கமிட்டி உறுப்பினர் தோழர் பி. ஏழுமலை அவர்கள் 14-12-53ல் இயற்கை எய்தியது குறித்து வருந்துவதுடன், அன்னார் குடும்பத்தினருக்கு மன்றம் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறது.

* * *

2-12-53ல் தோழர் மா. முருகன் அவர்கள் இயற்கை எய்தியமைக்கு அவர்தம் குடும்பத்தினருக்கு அனுதாபம் தெரிவித்துக் கொள்ளுவதாக பம்பாய் உரிமை வளர்ச்சி கழகத்தினர் அறிவிக்கின்றனர்.

* * *

28-11-53ல், அலகாபாத், தாராகஞ்ச்மோரியில், 14 மொழிகள் பேசவும், 8 மொழிகள் எழுதப் படிக்கத் தெரிந்தவருமான டி. கே. பாஷ்யம் இயற்கை எய்தியதை டி. சண்முகம்—புஷ்பகாந்தம் அறிவித்துக் கொள்ளுகின்றனர்.

* * *

வாட்டாகுடி தோழர் கே. முகம்மது அலி அவர்களின் தாயார் நூர் பீவி அம்மாள் 2-12-53ல் இயற்கை எய்தியமைக்கு அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுவதாக வாட்டாகுடி தி. மு கழகத் தோழர்கள் அறிவிக்கின்றனர்.

* * *

கண்ணனூர் தி. மு. கழகச் செயலாளர் ப. அப்பாசாமி இயற்கையெய்தியது குறித்து, அந்த வட்டாரத் தோழர்கள் வருந்துவதுடன், அவரது குடும்பத்தாருக்கு அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றனர்.

* * *

6-12-53ல், தோழர் ஏ ஜி. சாமி தலைமையில் நடைபெற்ற ஆம்பூர் தி மு. கழக உறுப்பினர் கூட்டத்தில், கழகத் தோழர் பி. மாணிக்கம் அவர்களின் மரணத்திற்கு வருந்தியும், அவர் குடும்பத்தினருக்கு அனுதாபமும் தெரிவித்துக்கொள்ளப்பட்டது,

கெய்ரோ, டிச. 23— ஆகாகானின் வெள்ளி விழா, தங்க விழா, வைர விழா நாட்கள் கொண்டாடப்பட்டுவிட்டன; ஜனவரியில் 'பிளாடினம்' விழாவை நடத்த ஆப்பிரிக்க இஸ்மைலிகள் ஏற்பாடுகள் செய்து வருகின்றனர்.

திராவிட முன்னேற்றக் கழகத் துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தின் அச்சிடப்பெற்று (34, குச்சி நாராயண செட்டித் தெரு, இராயபுரம்) வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: இ. [illegible]
[illegible]

